2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 13 மதுரை 24—4—75 வியாழன் மலர் 71

### மக்கள் பிரதிநிதியா?

## கொலைகாரர்களுக்கு பாதுகாப்பு தருபவரா?

ஜேஸடியோமினு என்பவன் பல கொலை கேசுகளுக்காக தேடப்பட்டவன். அவன் ஜெய்பூரில் உள்ள அரசாங்க விடுதியில் காங்கிரஸ் எம் எல் ஏயின அறையில் பிடிக்கப்பட்டானும் அவனை பிடிப்பதற்கு போலீஸ் அந்த அறைக்குள் நுழைந்தபோது அவன் நிம்மதியாக தூங்கிக் கொண்டிருந்தானும்.

—'டைம்ஸ் ஆப் இந்தியா' ஏப் 5

### திருமதி கருங்காலி எம்எல்ஏவை

## நர்சுகள் 'கெரோ'

பூனா, ஏப். 20—

பாட்னா நகரில் வேலைநிறுத்தம் செய்து வரும் சாஸ்சன் ஆஸ்பத்திரி நர்சுகளும் 4வது வகுப்பு ஊழியர்களுமாக 200 பேர் காங்கிரஸ் எம் எல் ஏவான திருமதி லீலாமொர்செண்ட் என்பவரை 90 நிமிடம் கெரோ செய்தனர். அவர் நர்சுகளுக்குரிய வேலையை கவனிப்பதற்கு தன்னுடைய கட்சி பெண்களை கருங்காலி வேலைக்கு கூட்டி வருவதற்காக ஆஸ்பத்திரியை விட்டு வெளியே சென்றபோதே அவரை வளைத்து பிடித்து கெரோ செய்தனர்.

## தென்வியட்னும் விடுதலைப்படைகள் சைகோனை நெருங்குகின்றன

## மக்களை ரத்த வெள்ளத்தில் மூழ்கடித்த துரோகி தியூ

# ஜனதிபதி பதவியை விட்டே ஓட்டம்

# வியட்நாமில் உருவாகிவரும் புதிய நிலைமை

சைகோன், ஏப். 21—

**தென்வியட்னும் விடுதலைப் படைகள் வெகுவேகமாக முன்னேறி வருவதால் பொம்மை அரசின் இறுதிக் காலத்தை உணர்ந்த தியூ தனது ஜனதிபதி பதவியிலிருந்து இறங்கிக் கொண்டான். அமெரிக்க அடிவருடியான பொம்மை அரசில் உதவி ஜனதிபதியாகஇருந்த டிரான்வான்ஹுயாங் என்பவனிடம் அதிகாரத்தை ஒப்படைத்துவிட்டான். கம்போடிய மக்களின்துரோகியான லான்நால் அமெரிக்காவில் அடைக்கலம் ஆனதுபோல் வியட்னும் மக்களின் துரோகி அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் கைக்கூலியான தியூவும் அமெரிக்காவிற்கு ஓடவிருக்கிருன்.**

விடுதலைப்படைகள் வெற்றிகளை பல ஈட்டி சைகோனை நோக்கி வருவதால் இதைத் தடுக்க முடியாத தியூ, நவீன ஆயுதங்களையெல்லாம் வியட்னும் மண்ணில் குவித்த அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் உதவி தேவையான அளவு கிடைக்கவில்லையென்று அழுது புலம்பியிருக்கிருன். பதவியை ராஜினமா செய்யும் செய்தியை டெலிவிஷன் மூலம் தெரிவித்தபோது மக்களின் துரோகிகளுக்கு என்ன நிலை ஏற்படும் என்பதற்கு உதாரணமாக பேச முடியாமல் திணறியிருக்கிருன்.

தியூ பதவியை ராஜினமா செய்வதற்கு முன்பு தென்வியட்னுமில் யுத்த ரீதியில் முக்கியத்துவம் வாய்ந்த சுயான்லாக் நகரத்தை விடுதலை செய்துள்ளன.

இந்திய நேரப்படி மாலை 6-30க்கு தனது பதவி விலகலை சைகோன் நகரில உள்ள தேசிய அசெம்ளியில அறிவித்தான்.

'ஜனதிபதி பதவியிலிருந்து ராஜினமா செய்கிறேன என்ற செய்தியை தேசிய அசெம்பிளியில் அறிவிக்கிறேன' என்பதை உதடுகளை கடித்துக் கொண்டு கண்ணீர மல்க கூறியிருக்கிருன்.

சைகோன் நகரில்உள்ள ஜனதிபதிமாளிகையிலிருந்து 29 மைல் தூரத்தில் கூலிப் படைகள் காவல் நாய்களாக காத்து நின்றன. தொலைவில் விடுதலைப் படைகள் சைகோன் நகரின் 3 திசைகளிலும சுற்றி நின்று ஆயத்த நிலையில் இருந்தன.

தியூ பதவி விலகலையொட்டி சைகோன் நகரில் அன்று இரவிலிருந்து காலை வரை தடையுத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டன, கூலிப் படைகள் துப்பாக்கிகளோடு நகரைச் சுற்றி காவல் காத்து வந்தன.

### அமெரிக்காதான் காரணமாம்

தனது பதவி விலகலை அறிவித்தபோது தோல்விகளுக்கெல்லாம் காரணம் அமெரிக்க அரசாங்கம்தான் என்று ஒப்பாரி வைத்திருக்கிருன் தியூ.

1973-ம் ஆண்டு பாரிஸ் ஒப்பந்தம் கையெழுத்தானபோது தனது அரசைக் காப்பாற்ற தேவையான ராணுவ உதவிகளையெல்லாம் அளிப்பதாக அன்றைய அமெரிக்க ஜனதிபதி நிக்சன் வாக்குறுதி அளித்திருந்தாராம்.

பேப்பரில் எழுதிக் கொடுத்த உறுதி மொழி பேப்பரோடே போய் விட்டது என்று புலம்பினன் தியூ.

மேலும் பாரிஸ் ஒப்பந்தத்தின் போது அமெரிக்காவும் தியூவும் ரகசிய ஒப்பந்தம் தனியாக செய்து கொண்டார்களாம். அவ்வொப்பந்தப்படி கூட அமெரிக்கா உதவவில்லையாம்.

வியட்னும் மக்களை ரத்த வெள்ளத்தில் மூழ்கடிக்க ஆயிரக்கணக்கான கோடி டாலர் மதிப்புள்ள நவீன ஆயுதங்களையும் சர்வதேச சட்டவிரோத ஆயுதங்களை பொம்மையும அரசுக்கு சப்ளை செய்தது அமெரிக்க அரசு. விடுதலைப்படைகளின் முன்பு தாக்குப்பிடிக்கமுடியாமல் ஆயுதங்களைப் பறிகொடுத்துவிட்டு ஓடினகூலிப்படைகள்

தனது அஸ்தமனக் காலத்தில் கூட இதை உணர மறுக்கும இத்துரோகி அமெரிக்க ஆயுதம சப்ளை செய்யவில்லையென்றும் அமெரிக்கா கைகழுவி விட்டது என்றும கூறுகிருன்.

### விடுதலைப் படைகளின் வெற்றியே காரணம்

பதவியிலிருந்து விலகிய தியூ அமெரிக்காவிற்கு ஓடிப்போகக்கூடும என பொம்மை அரசின அதிகாரிகள் கூறுகின்றனர்.

ஏற்கனவே கம்போடிய மக்களின் துரோகியான லான்நால். பொம்மை அரசு விடுதலைப் படைகளால் முறியடிக்கப்படும் கம்போடியமக்களுக்கு செய்த துரோகத்திற்கு தனது தலை துண்டிக்கப்படும என்பதை உணர்ந்து அமெரிக்காவிற்கு இரவோடு இரவாக ஹெலிகாப்டரின் மூலம் தப்பியோடினன் அல்லவா? அதைப் போல தியூவும் அமெரிக்காவில் அடைக்கலம் அடையக்கூடும்.

உலகில் உள்ள பிற்போக்கு பிண்டங்களுக்கும் மக்கள் துரோகிகளுக்கும் அடைக்கலம் அளிப்பது தானே அமெரிக்க ஏகாதிபத்தியம்.

தியூவின் பதவி விலகலை அவசரப்படுத்தியது விடுதலைப் படைகளின் வேகமான வெற்றியே.

யுத்த ரீதியில் முக்கியத்துவம் வாய்ந்த சைகோன் நகரிலிருந்து 40 மைல் தூரத்தில் உள்ள சுயான்லாக் நகரிலிருந்து விடுதலைப் படைகளால் கூலிப் படைகள் விரட்டப்பட்டு விடுதலைப் படைகளின் கட்டுப்பாட்டிற்கு அந்நகர் வந்து விட்டால் சைகோன் வீழ்ச்சி ஆரம்பமாகிறது என கூறப்பட்டது. மேலும் இந்நகரத்தை இழக்கமாட்டோம்; விடுதலைப் படைகளை வெற்றி கொள்ள விடமாட்டோம் என கூலிப்படைகளின் தளபதிகள் ஜம்பம் அடித்து வந்தார்கள்.

ஆனல் சுயான்லாக் நகரம் விடுதலை படைகளின் கட்டுப்பாட்டிற்குள் வந்து விட்டதால் தியூவிற்கு ஜன்னி கண்டுவிட்டது.

சுயான்லாக்கை பிடித்த விடுதலைப் படைகள் தென்மேற்காக சைகோனை நோக்கி செல்ல ஆரம்பித்துவிட்டன.

### போர்டின் சுருதி இறங்குகிறது

தியூ பதவி விலகுமாறு அமெரிக்கா நிர்ப்பந்திக்கவில்லை என்று அமெரிக்க ஜனதிபதி போர்டு குறிப்பிட்டுள்ளார்.

வியட்னும் மக்களை ரத்த வெள்ளத்தில் மூழ்கடித்து தனது கைக்கூலியான தியூவின் அரசைக் காப்பாற்ற அனைத்து இழி முயற்சிகளையும் மேற்கொண்டு படுதோல்வி கண்ட அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் தலைவர் போர்டு தென்வியட்னுமில் விடுதலைப் படைகளுக்கும் கூலிப் படைகளுக்குமிடையே நடைபெறும் யுத்தம நிறுத்தப்பட வேண்டும என்று புலம்பியுள்ளார்.

ராணுவ நடவடிக்கைகள் நிறுத்தி பேச்சுவார்த்தைகளுக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமாம்.

### கேரள மாநிலம் முழுவதும்

## ஆர்ப்பாட்டம் நடத்துவதற்கு மார்க்சிஸ்ட் கட்சி முடிவு

திருவனந்தபுரம், ஏப்.22—

மைனரிட்டியாகிப் போன கேரள கூட்டணி அரசை நீடிக்கச் செய்வதற்கு செய்யப்படும் தில்லுமுல்லுகளை அம்பலப்படுத்துவதற்கும் கண்டிப்பதற்கும்கேரளாவில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி,மாநில ரீதியான ஆர்ப்பாட்டங்களை நடத்தும் என மாநில செயற்குழு அறிக்கையொன்றில் கூறியுள்ளது.

கடந்த ஞாயிற்றுக்கிழமை விடப்பட்ட அந்த அறிக்கையில் மேலும் சட்டசபையில் ஆளும் கூட்டணிக்கான மெஜாரிட்டியை காட்டுவதற்காக அதன் கட்சிகள் சட்டமன்ற உறுப்பினர்களை விலை பேசும் வேலைகளில் ஈடுபட்டுள்ளது என குற்றம் சாட்டப்பட்டுளளது,

காங்கிரசுக் கட்சிக்குள் முற்போக்கு வேஷமிட்டுள்ள இளைஞர் அணி காங்கிரஸ் முதலில் மந்திரிசபை ராஜினமா செய்யவேண்டும என்று கூறி வந்தது என்றும் பின்பு இந்திரா காந்தியின் வற்புறுத்தலுக்கு சரண் அடைந்துவிட்டது என்றும அந்த அறிக்கையில் கூறப்பட்டுளளது,

மேலும் பிரதமர் இந்திரா காந்தி தன்னுடைய ஆதிக்க கொள்கையை விஸ்தரிப்பதற்கான நடவடிக்கைகளின் தொடர்ச்சியாக கேரள மாநில உள் விவகாரங்களில் அதிக அளவு தலையிடுகிருர் என்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின கேரள மாநில செயற்குழு தனது அறிக்கையில் குற்றஞ்சாட்டியது.

புதுவையில்

## விரைவில் தேர்தல் நடத்துக

### இந்திராவிடம் வற்புறுத்தல்

பாண்டிச்சேரி, ஏப். 23—

பாண்டிச்சேரி மாநில சட்டமன்றத்துக்கு விரைவில் தேர்தல் நடத்த வேண்டும் என்று இங்கு வந்திருந்த பிரதமர் இந்திரா காந்தியிடம் அரசியல் கட்சிகள் வற்புறுத்தின.

### இந்திரா காங்கிரஸ்

பருக்மரைக்காயர் (தி.மு.க), எஸ் ராமசாமி (அண்ணு தி.மு.க.), வி சுப்பையா, (வலது கம்யூ), வெங்கட் சுப்பா ரெட்டி, பி சண்முகம் (இந்திரா காங்கிரஸ்) ஆகியோர் தனித்தனியே இந்திராவைச் சந்தித்து இக்கோரிக்கையை வற்புறுத்தினர். மனுக்களும் அளித்தனர்.

### தொழிற்சங்க தலைவர்கள்

ஊதியமுடக்கச் சட்டத்தை ரத்துச் செய்யும்படி தொழிற்சங்கத் தலைவர்கள் இந்திரா காந்தியைச் சந்தித்து வற்புறுத்தினர்.

### மதுரை கோட்ஸ் அதிகாரி மீது

# போலீசில் புகார்

## தொழிலாளர்களை அடிப்போம் என்று மிரட்டினராம்

மதுரை, ஏப். 21—

ஆட்களை ஏவி 'கேட்டில் விட்டு அடிக்க விடுவேன்'என்றுசிதம்பரம்என்ற தொழிலாளியை மதுரை கோட்ஸ் லேபர் ஆபீசர் மிரட்டினராம்.

இதுசம்பந்தமாக தொழிலாளி சிதம்பரம் போலீஸ் எஸ் பி.யிடம் புகார்ஒன்றை கொடுத்துள்ளார்.

மதுரை கோட்ஸ், பழைய மில் சென்ட்ரல் வேஸ்ட் டிபார்ட்மெண்டில் பணி புரிந்து வரும் இத்தொழிலாளி அதிக உற்பத்தி எடுத்ததால் அதற்குரிய ஊக்குவிப்புச்சம்பளம் அவரது இந்த மாதச் சம்பளத்துடன் சேர்த்து கொடுக்கப் பட்வில்லையாம். அதுசம்பந்தமாக தான் தனது டிபார்ட்மெண்ட் அதிகாரியிடம் முறையிட்டதற்கு, லேபர் மேனேஜரிடம் சொல்லியிருப்பதாகவும் அவரிடம் போய் கேட்கும்படியும் சொன்னராம்.

அதன்படி லேபர் மேனேஜர் கிருஷ்ணு என்பவரிடம் சிதம்பரம அதே டிபார்ட்மெண்ட்டைச் சார்ந்த ராமசாமி என்பவருடன்18ந்தேதி காலையில் சென்று கேட்ட பொழுது, நீயும், சின்னத்தேவரும்,கேட்டில், போனஸ் கிடைக்க தொழிலாளர்களிடம கிளர்ச்சிசெய்ய தூண்டு

(2-ம் பக்கம் பார்க்க)

## ஜூன் 8, 11 குஜராத்தில் தேர்தல்

புதுடெல்லி, 22—

குஜராத் மாநில சட்டமன்றத்திற்கான இடைத் தேர்தல் வருகிற ஜூன் மாதம் 8, 11 ஆகிய இருதேதிகளில் நடைபெறும். 13-ந் தேதியன்று எல்லா தேர்தல் முடிவுகளும் அறிவிக்கப்படும். வேட்பு மனுக்கள் தாக்கல் செய்யப்படுவது மே 7-ந் தேதி துவங்கி 14-ந் தேதி முடிவடையும்.

இத்தகவலை இங்கு நேற்று தேர்தல் கமிஷன் அறிவித்தது

இதுபற்றிய அறிவிப்பை மே 7-ந் தேதி வெளியிடும்படி மாநிலக் கவர்னருக்கு சிபாரிசு செய்யப்படும் என்றும் தேர்தல் கமிஷன் அறிவித்தது.

மொத்த வாக்காளர் எண்ணிக்கை ஒரு கோடியே 41 இலட்சமாகும்.

168 ஆக இருந்த இம் மாநில சட்டசபை ஸ்தானங்கள், அண்மையில் நடந்த தொகுதி வரையறுப்புக்குப் பின் 182 ஆக உயர்ந்தது.

இதில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு 12 இடங்களும், மலைஜாதியினருக்கு 25 இடங்களும் ஒதுக்கப்பட்டுள்ளன.

விலைவாசி உயர்வை எதிர்த்தும, உணவு நெருக்கடியை எதிர்த்தும் மாணவர்களும், மக்களும் நடத்திய போராட்டத்தையொட்டி சிமனபாய் படேல் தலைமையிலான இந்திரா காங்கிரஸ் அமைச்சரவையும் சட்டசபையும 1—2—74-ல் கலைக்கப்பட்டது.

அப்போராட்டத்தினை முறியடிப்பதற்காக இந்திரா காங்கிரஸ் ஆட்சியாளர் தூக்கிய துப்பாக்கிகளுக்கு ஏராளமான மாணவர்களும் மக்களும் பலியானது அறிந்ததே.

### ஓட்டல் தொழிலாளி கொலை:

## சப்-இன்ஸ்பெக்டர் கைது

### உதவி இன்ஸ்பெக்டர் தலைமறைவு

கடலூர், ஏப் 22—

பண்ருட்டி பஸ் நிலையம் அருகில் உள்ள முருகன் ஓட்டலில், ரெங்கநாதன் என்ற தொழிலாளி அடித்தே கொல்லப்பட்டது சம்பந்தமாக போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர்ஜீனதாசன் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டார்.

ஓட்டல் கேசியராக வேலை பார்த்த ரெங்கநாதனை கையாடல் செய்ததாகக் கூறி—ஓட்டல் மாடியில் பல நாட்கள் வைத்து சாகும் வரை அடித்ததாக ஓட்டல் உரிமையாளர் ராமன் ரெட்டியார், அவரது சகோதரர் முத்துகிருஷ்ணன் ரெட்டியார், போலீஸ் உதவிஇன்ஸ்பெக்டர் ஜீவேந்திரன், சப்-இன்ஸ்பெக்டர் ஜீனதாசன் மற்றும் ராமச்சந்திரன் ஆகியோர் மீது புகார் கூறப்படுகிறது.

இக்கொலையைக் கண்டித்தும், இது சம்பந்தமாக விசாரித்து குற்றவாளிகளை கைது செய்ய வேண்டும் என்றும ஓட்டல் தொழிலாளர்கள் 14-ந் தேதி பூரண வேலை நிறுத்தம் செய்தனர்.

பொதுத்தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் ஏ எல் நாகராஜன் தலைமையில் கண்டன ஊர்வலமும் நடந்தது.

### தலைமறைவு

இதைத் தொடர்ந்து சப் இன்ஸ்பெக்டர் ஜீனதாசனும் உதவி இன்ஸ்பெக்டர் ஜீவேந்திரனும சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளனர். ஜீனதாசன கைது செய்யப்பட்டுளளார். மற்றவர்கள் அனைவரும தலைமறைவாகி விட்டார்கள் என்று கூறப்படுகிறது.

## இந்திரா அரசின் டபுள்ரோல்

புதுடெல்லி, ஏப் 21—

இந்தியாவிற்கு அமெரிக்கா ஒரு லட்சம் டன் அரிசி சப்ளை செய்வதற்கான சாததியம் பற்றி இரு நாடுகளுக்குமிடையே பேச்சுவார்த்தை நடப்பதாக இன்று நாடாளுமன்றத்தில் மத்திய உணவு ராஜாங்க அமைச்சர் ஷிண்டே கூறினர்.

மேலும ஏற்கனவே அமெரிக்காவிடமிருந்து 8 லட்சம டன் கோதுமை வாங்குவதற்கான மார்ச் 20-ந் தேதிய ஒப்பந்தத்தில் இந்த ஒரு லட்சம் டன் அரிசி சேராது என்றும் குறிப்பிட்டார்.

டையகோகார்சியாவில் ராணுவ தளங்களை அமைத்தும, பாகிஸ்தானுக்கு ஆயுத சப்ளை செய்து இந்திய உபகண்டத்தில் பதட்ட நிலைகளை ஏற்படுத்தியும் இந்தியாவுக்கு எதிரான நடவடிக்கைகளை மேற்கொள்ளும் அமெரிக்காவிடம, இந்தியா தானியக் கடன் கேட்டுக்கொண்டிருக்கிறதே என்று மதுகர் என்ற நாடாளுமன்ற உறுப்பினர் கேட்டார்,

அதற்குபதில் அளித்த அமைச்சர் ஷிண்டே, அக்குறிப்பிட்ட பிரச்சினைகளில் இந்தியாவின் நிலை நன்கு தெரிந்தததுதானும நாட்டு நலனையை முன்னிட்டு அமெரிக்காவிடம உணவு வாங்கும் பிரச்னைகளோடு அக்குறிப்பிட்ட பிரச்சினை (டையகோ கார்ஷியாவில் அமெரிக்கராணுவ தளம், பாகிஸ்தானுக்கு ஆயுத சப்ளை பிரச்சனை) கள் எவ்வித சம்பந்தமும் கொண்டிருக்கவில்லையாம்,

இந்திய பாதுகாப்பு பராமரிப்பு போன்ற தொழிலாளர்—மக்கள் விரோதச் சட்டங்களை நியாயப்படுத்தும் போதெல்லாம இந்துமகா சமுத்திரத்தின் வழியாக ஆபத்து வருகிறது என்றெல்லாம் பெரிதாக கூறுகிருர் பிரதமர் இந்திராகாந்தி. அப்படியொரு பிரச்னையை ஏற்படுத்தும் அமெரிக்காவிடம தானியம் வாங்கினல் அப்பிரச்னையோடு சம்பந்தமில்லையாம்.

இந்தியாவின் நிலப்பிரபுக்களிடம கட்டாயக்கொள் முதல் செய்ய அஞ்சும் ஷிண்டே, அமெரிக்காவிடம் பிச்சைத் தட்டுஏந்துவதற்கு பெயர் 'நாட்டு நல'னும

இந்திய அரசைப் பொறுத்த வரையில் நிலப்பிரபுத்துவ நலன்தான்நாட்டு நலன.

ஒருபக்கம் இந்திராகாந்தி டையகோ கார்சியாவைக் காட்டி அமெரிக்கபூச்சாண்டி. மறுபக்கம கோதுமைக்கும அரிசிக்கும் இந்திராகாந்தியின அமைச்சர் ஷிண்டே அதே அமெரிக்காவிடம கெஞ்சல்.

இதற்குபெயர்தான் ஏகாதிபத்திய 'எதிர்ப்பாம்'

# தீக்கதிர்

## புரட்சி அரசுகளும் இந்தியாவின் விபரீதப் போக்கும்

கம்போடிய நாட்டு மக்கள் தங்களது தாய்த்திருநாட்டை அமெரிக்கக் கைக் கூலிகளிடமிருந்து விடுதலை செய்து தலைநகர் நாம்பென்னில் விடுதலைக் கொடியை பறக்க விட்ட நிகழ்ச்சி உலகெங்குமுள்ள மக்களது உள்ளங்கவர்ந்த உணர்ச்சிமிகுந்த சம்பவம்.

80 நாடுகளுக்கு மேல், கம்போடியாவை அங்கீரித்துவிட்டன. கடைசியாக அங்கீகரித்த நாடுகளில் இந்தியாவும் ஒன்று. நாம்பென்னுக்குள் விடுதலைப் படைகள் நுழைவதற்கு இரு தினங்களுக்கு முன்புதான், இந்திராகாந்தி ஆட்சிக்கு புத்தி வந்தது அங்கீகாரம் வழங்கியுள்ளது. அதுவரை அமெரிக்க ஏஜெண்ட் லானநாலைத்தான் இந்திரா அங்கீகரித்து வந்தார்.

அதேபோல், தென்வியட்னமில் உலக மக்களாலும், வியத்நாம் மக்களாலும் வெறுக்கப்பட்ட அமெரிக்க ஏஜெண்ட் தியூவைத்தான் நேற்று வரை—தியூ ராஜினாமச் செய்து விட்டு ஓடும் வரை—அங்கீகரித்து வந்தது இந்திய அரசு. பாரிஸ் ஒப்பந்தத்தில் அமெரிக்காவுடன் சம அந்தஸ்தில் நின்று கையெழுத்திட்ட தெற்கு வியத்நாம் புரட்சி அரசை இந்திராகாந்தி ஆட்சி அங்கீகரிக்க மறுத்து வருகிறது.

காரணம் வேறு ஒன்றுமல்ல, அமெரிக்கா மீது இந்திரா அரசுக்குள்ள பயம்.

ஆண்டுதோறும் அமெரிக்காவிடம் டாலர் பிச்சை வாங்க வேண்டிய நிலையில் இந்திரா ஆட்சி வைக்கப்பட்டுள்ளதால ஐந்தில் நான்கு பகுதி தெற்கு வியட்நாம பூமி புரட்சி அரசின் கையிலிருந்தபோதிலும், இந்த அரசை அங்கீகரிக்க மறுத்து வருகிறது.

இதுமட்டுமல்ல; கொரிய தேசம் அமெரிக்கர்வின் தலையீட்டு நடவடிக்கைகளின் காரணமாக இரண்டாகப் பிளவுபட்டிருப்பதும் அதன் வடக்குப் பகுதி சோஷலிஸ ஆட்சியின் கீழ் பிரமிக்கத் தகுந்த முன்னேற்றங்கள் கண்டு வருவதும், தென்பகுதி பாக்-சுங்-கீ என்ற அமெரிக்கக் கைப்பாவையின் ஆட்சியில் கொடிய அடக்குமுறைகளுக்கு ஆளாகி வருவதையும் அனைவரும் அறிவர்.

இரு கொரியாக்களையும் சமாதான பூர்வமாக ஒன்றுபடுத்துவதற்கு வடகொரிய அதிபர் கிம்-இல்-சுங் மேற்கொண்ட அனைத்து முயற்சிகளை அமெரிக்காவும் பாக்-சுங்-கீயும் சேர்ந்து முறியடித்து வருகின்றனர்.

இந்த நிலைமையில் இந்திய அரசு செய்வதென்ன? கொரிய இணைப்புக்கு உதவி செய்யாமல் அமெரிக்காவின் ராணுவ களமாக மாறிவரும் தென் கொரியாவுடன் விசேஷ நட்புறவுகொள்ள சகல நடவடிக்கையும் மேற்கொண்டு வருகிறது. தென் கொரியாவுக்கு இந்திய அன்னிய விவகார அமைச்சர் விஜயம் செய்து பாக்-சுங்-கீயின் கொடுங்கோலாட்சிக்கு அங்கீகார முத்திரையிடுவது போன்று நடந்து கொண்டார்.

அத்துடன் நிற்கவில்லை, இன்று தென் கொரியாவின் அயல்நாட்டு அமைச்சரை டெல்லிக்கு அழைத்து அவருடன் இந்திய—தென் கொரிய அரசுகளின் நல்லுறவை பலப்படுத்தும் பேச்சு வார்த்தை நடக்கப்பட்டு வருகிறது.

உலகமெங்கும் அமெரிக்க ஏகாதிபத்தியச் சதிகளையும ஆக்கிரமிப்புகளையும் எதிர்த்து வீரமிக்க சுதந்திரப் போராட்டங்களை நடத்திவரும் விடுதலை வேட்கைகொண்ட மக்களுடன் அல்ல, மாருக, மக்களால் வெறுக்கப்பட்ட ஆட்சிகளின் மீதுதான் — அமெரிக்க ஏஜெண்டுகளாக உள்ள ஆட்சிகளின் மீதுதான் இந்திய ஆட்சியாளரின் பாசமும் பரிவும் நேசமும் மேலோங்கியுள்ளன என்பதற்கு மேற்கூறியவை உதாரணங்களாகும்.

சுதந்திரத்திற்காகவும், தங்கள் நாட்டின் ஒற்றுமைக்காகவும் போராடும் சகல மக்களின் மீது இந்திய மக்களுக்கு ஆழ்ந்த அனுதாபம் உண்டு.

உலக முழுமைக்கும் பேரபாயமாக விளங்கும் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் வெறிச்செயல்களை ஒடுக்குவதில் லாவோசும், கம்போடியாவும், வியட்நாமும், கொரியாவும் ஆற்றி வரும் பங்கு மகத்தானது. உலகெங்கும் ஜனநாயகத்தையும் சுதந்திரத்தையும் பாதுகாப்பதில் அவர்களது பங்கு மகத்தானது.

இப்படிப்பட்ட மக்களது புரட்சிகரமான சுதந்திர அரசுகளுடன் நேச உறவு கொள்ள இந்திய ஆட்சியாளர்கள் மறுப்பது ஏன்?

சைகோனை புரட்சிப் படைகள் கைப்பற்றிய பிறகுதான் தெற்கு வியத்நாம் புரட்சி அரசுக்கு அங்கீகாரமளிக்க இந்திய அரசு முன்வரப் போகிறதா?

அந்த அளவு இந்திய அரசு அமெரிக்க ஆட்சியாளரின் மிரட்டலுக்கு தனனை உட்படுத்திக் கொண்டுள்ளதா என்று வினவுகிறோம்.

---

### மதுரை கோட்ஸ் போனஸ் பிரச்னை

## அமைச்சர் முன் நடந்த பேச்சுவார்த்தையும் தோல்வி

மதுரை, ஏப் 22—

மதுரை கோட்ஸ் (மில்) போனஸ் குறித்து மாநில தொழிலாளர் நல அமைச்சர் முன்னிலையில் நடந்த பேச்சுவார்த்தையும தோல்வியுற்றது.

கோவை மில்தொழிலாளர்களுக்கு கிடைத்த 21.33 சதவீதம் போனஸ் போல தங்களுக்கும தரப்படவேண்டும் என்று மதுரைகோட்ஸ் தொழிலாளர்கள் கோரி வருகின்றனர்.

இது சம்பந்தமாக நிர்வாகத்துக்கும் தொழிற்சங்க தலைவர்களுக்கு மிடையே — அதிகாரிகள் முன்னிலையில் — மதுரை, அம்பை, திருச்சி முதலிய இடங்களில பேச்சுவார்த்தைகள் நடந்தன, நிர்வாகத்தின் பிடிவாதக்காரணமாக பேச்சுவார்த்தைகள் தோல்வியடைந்தன.

கடைசியாக சென்னை ..ல் தொழிலாளர் நல அமைச்சர், தொழிலாளர் நல ஆணையாளர் ஆகியோர் முன்னிலையில் பேச்சுவார்த்தை நடந்தது. இதில் மதுரை பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம்(சிஐடியூ)சார்பில் செயலாளர் தோழர் ப மு குமாரும், மற்ற தொழிற்சங்கங்களின் தலைவர்களும் கலந்து கொண்டனர்.

### நிர்வாகத்தின் பிடிவாதம்

முதலில் 40 இலட்சம் ரூபாய்தான் போனசாகத் தருவேன் என்று பிடிவாதம் செய்தநிர்வாகம, இந்தபேச்சுவார்த்தையில் ரூ 48 லட்சமாக உயர்த்தித்தர ஒப்புக்கொண்டது.

தங்களுக்கு கோவை போனஸ் தரப்பட வேண்டும் என்று தொழிலாளர் தலைவர்கள் முன்வைத்த கோரிக்கையை நிர்வாகம் ஏற்க மறுத்து விட்டதால் இந்த பேச்சுவார்த்தையும் தோல்வி அடைந்தது.

---

### தோழர் லாசரைத் தாக்கிய

## சப்-இன்ஸ்பெக்டருக்கு கைது 'வாரண்டு' கோர்ட்டு உத்தரவு

உசிலம்பட்டி, ஏப் 22—

கம்பக்கில் தோழர் லாசரைத் தாக்கிய போலீஸ்-சப் இன்ஸ்பெக்டரை கைது செய்யும்படி உசிலம்பட்டி சப்-டிவிசனல் மாஜிஸ்ட்ரேட் உத்திரவிட்டுள்ளார்.

கடந்த 23—12—74-ந் தேதியன்று கம்பம் நகரில் முத்துராமலிங்கத் தேவர் சிலை திறப்பு விழா நடந்தது.

அக்கூட்டத்தில் இருந்த பெரியகுளம் — உத்தமபாளையம் தாலுகா விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் ஏ லாசரை தேடிப் பிடித்து வழி நெடுக அடித்துக் கொண்டே போய் லாக்-அப்பிலும்வைத்து உணர்வு இழக்கும் அளவுக்கு போலீசார் கடுமையாகத் தாக்கிப் படுகாயப்படுத்தினர்.

பின்னர், ஆயிரக்கணக்கான மக்கள் கோபாவேசமாக கிளர்ந்தெழுந்து வந்து போலீஸ் நிலையம் முன் ஆர்ப்பாட்டம் செய்யவே, தோழர் லாசர் விடுவிக்கப்பட்டார்.

தம்மைத் தாக்கியதாக சப்-இன்ஸ்பெக்டர்சண்முகம் மீதும்மற்றும் ரெங்கசாமி, சக்கணன், பால்பாண்டி, பாய் ஆகிய போலீசார் மீதும் தோழர் லாசர் மேலதிகாரிகளுக்கு புகார் செய்து நடவடிக்கை எடுக்கும்படி வற்புறுத்தி இருந்தார். ஆனல் எந்தவித நடவடிக்கையும் எடுக்கப்படாததால், உசிலம்பட்டி எஸ் டி எம் கோர்ட்டில் தோழர் லாசர் தம்மைத் தாக்கியவர்கள் மீது வழக்கு தொடர்ந்தார்.

இதுவரை நடந்துள்ள 10 வாய்தாக்களில் ஒரே ஒரு தட்வைதான் சப்-இன்ஸ்பெக்டர் கோர்ட்டில் ஆஜராகியுள்ளாராம். கடந்த 19ல் நடந்த வாய்தாவிற்கும் வராததால் அந்த சப்இன்ஸ்பெக்டர் மீது மாஜிஸ்திரேட் 'அரஸ்ட் வாரண்டு' பிறப்பித்துள்ளார்.

---

### காஞ்சியில்

## மாதர் சங்க ஆண்டுவிழா

காஞ்சிபுரம், ஏப் 21—

தமிழக ஜனநாயக மாதர் சங்கத்தின் காஞ்சிபுரம் கிளையின் முதலாவது ஆண்டு விழா வருகிற 26ந் தேதி ராஜேஸ்வரி சல்யாண மண்டபத்தில் எஸ் நவநீதம் தலைமையில் நடக்கிறது.

மாநிலச் செயலாளர் பாப்பா உமாநாத், உதவிச் செயலாளர் மைதிலி சிவராமன், கே எஸ் பார்த்தசாரதி மற்றும் பலர் கலந்து கொள்கிருர்கள்.

மாலையில் காங்கிரோடு தேரடி அருகில் பொதுக் கூட்டமும் நடக்கிறது.

---

### தென்கொரிய பொம்மை அரசின்

## வெளிநாட்டமைச்சர் டெல்லியில் இந்திரா, சவானேடு சந்திப்பு

புதுடெல்லி, ஏப்.21—

அமெரிக்காவின்பொம்மையான தென்கொரிய பாக் சுங்கீ அரசின் வெளிநாட்டு அமைச்சர் டோங் ஜோகிம டெல்லிக்கு வந்துள்ளார்.

அவர் இன்று பிரதமர் இந்திராகாந்தியையும் வெளிநாட்டமைச்சர் சவானையும், பாதுகாப்புஅமைப்புஸ்வரண் சிங்கையும் சந்தித்துப்பேசினர். இருநாடுகளுக்குமிடையே உறவுகளை மென்மேலும் வளர்த்துக் கொள்வதுபற்றியும் ஐ நா சபையில் இரு நாடுகளின் பங்கு பற்றியும் பேசப்பட்டிருக்கிறது.

கம்போடியாவில் விடுதலைப் படைகள் வெற்றி, தென்வியட்னமில் புரட்சிப் படைகளின் முன்னேற்றம் இவைகளால் தென்கொரிய வெளிநாட்டு அமைச்சர் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளாராம்.

அவ்விரு நாடுகளிலும் விடுதலைப்படைகள் வெற்றி, அதிர்ச்சி அளிப்பதாகவும் இரு பகுதிகளாக பிரிக்கப்பட்டுள்ள கொரியாவிலும் இது பிரதிபலிக்கும் என்றும் கூறினராம்.

மேலும் இந்திய அரசின் மூன்று தலைவர்களோடும் இந்தோசீனப்பிரச்சினை உட்பட சர்வதேசப் பிரச்னைகள் பற்றியும் பேச்சுவார்த்தை நடத்தியுள்ளார்.

---

### நெய்வேலி காண்ட்ராக்ட் தொழிலாளர்

## வேலை நிறுத்தம் நின்றது ஒப்பந்தம் ஏற்பட்டதால்

நெய்வேலி, ஏப் 22—

சம்பள உயர்வு கோரி கடந்த 1-ந் தேதி முதல் 15 நாட்களாக நடந்து வந்த காண்ட்ராக்ட் தொழிலாளர்களின் வேலைநிறுத்தம விலக்கிக் கொள்ளப்பட்டது.

இங்குள்ள லிக்னைட் கார்ப்பரேசனில், காண்ட்ராக்ட் எடுத்து வேலை செய்யும் 72 காண்ட்ராக்ட் முதலாளிகளுக்கும் 1800 தொழிலாளர்களது பிரதிநிதிகளுக்குமிடையே கடந்த15ந் தேதியன்று ஏற்பட்ட ஒப்பந்தத்தினையடுத்து இந்த வேலை நிறுத்தம வாபஸ் பெறப்பட்டது.

இந்த ஒப்பந்தத்தின்படி நாள் ஒன்றுக்கு குறைந்த பட்ச ஊதியம் 3-10 என நிர்ணயிக்கப்பட்டது. மேலும் கேட்டகரி அடிப்படையில் 50 காசு, 60 காசு, 95 காசு ஆக ஊதிய உயர்வும்கிடைக்கும்.

வேலை நிறுத்தத்தில் பங்கு கொண்ட தொழிலாளர்கள் மீது எவ்வித பழிவாங்கும் நடவடிக்கையும் எடுக்கப்பட மாட்டாது.

இந்த ஒப்பந்தம் 31-3-76 வரை அமுலில் இருக்கும் இந்த ஒப்பந்தத்தில் சி ஐ டி யூ வழிகாட்டலின் கீழ் செயல்பட்டு வரும் காண்ட்ராக்ட் தொழிலாளர் சங்கம், அண்ணா தொழிலாளர் — ஊழியர் சங்கம் ஆகியவற்றின் பிரதிநிதிகள் கையொப்பமிட்டனர்.

---

## முதல் இந்திய செயற்கை கோள்

புதுடெல்லி, ஏப். 21—

முதலாவது இந்திய செயற்கைக் கோள் 19-ந் தேதி பிற்பகல் ஒருமணிக்கு ஏவப்பட்டு, பூமியைச் சுற்றி வருகிறது.

'ஆர்யபட்டா' என்று பெயரிடப்பட்டுள்ள இந்த செயற்கைக்கோள், சோவியத் யூனியனின் விண்வெளி கலன் ஏவு நிலையம ஒன்றிலிருந்து—சோவியத் 'இண்டர் காஸ்மாஸ்' ராக்கெட் மூலம் ஏவப்பட்டுள்ளது.

ஒரு விநாடிக்கு[செகண்ட்] 5 மைல் வேகத்தில் பறக்கும் இது, 6 மாத காலம் பூமியைச் சுற்றி வந்து கொண்டிருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதனை உருவாக்க ரூ. 5 கோடி செலவும 25 மாத காலமும் ஆனது.

ஐந்தாவது நூற்றுண்டில், இந்தியாவில் வான வெளி சாஸ்திரியாகவும், கணித மேதையாகவும் விளங்கியவரான 'ஆர்யபட்டா'வின் பெயர் இந்தக் கோளுக்குச் சூட்டப்பட்டுள்ளது.

### தகவல் பிரிவு

விண்வெளியிலிருந்து இந்த செயற்கைக் கோள் அனுப்பும் தகவல்கள், ஸ்ரீஹரி கோட்டாவிலும், மாஸ்கோவிலும் உள்ள விண்வெளி தகவல் பதிவு நிலையங்களில பதிவாகின்றன என்று இந்திய விண்வெளி ஆய்வு நிலைய

(6-ம் பக்தி பார்க்க)

---

## போலிக்கார்டுகள் மார்க்சிஸ்டுகள் கைப்பற்றினர்

மதுரை, ஏப். 22—

மதுரை நகர் தத்தனேரி பகுதியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தோழர்கள், வியாபாரிகளிடமிருந்து 51 போலிக் கார்டுகளைக் கைப்பற்றி ஊர்வலமாகச் சென்று மாவட்டக் கலெக்டரிடம் ஒப்படைத்தனர்.

இந்தப் போலிக்கார்டுகளை வினியோகம் செய்த அதிகாரிகள் மீதும், மேலும் போலிக்கார்டுகள் வைத்திருக்கும் வியாபாரிகள் மீதும தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும என்று வற்புறுத்தும் மகஜர் ஒன்றும் அளிக்கப்பட்டது.

இவ்வாறுபோலிக்கார்டுகளை கைப்பற்றி ஒப்படைத்ததற்கு மகிழ்ச்சி தெரிவித்த கலெக்டர், தக்க நடவடிக்கை எடுப்பதாக உறுதி கூறினர்.

தத்தனேரி மந்தைத்திடலிலிருந்து புறப்பட்ட ஊர்வலத்துக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கடசியின் மதுரைக் கமிட்டி உறுப்பினர் எம். கணபதி, எஸ் ராஜு, தத்தனேரி டி. கணேஷ், மேலக்கைலாசபுரம் பி பெருமாள், கீழக்கைலாசபுரம் ஜி கணபதி ஆகிய தோழர்கள் தலைமை வகித்துச் சென்றனர்.

---

### அவசர நிலை பற்றி

## கருணாநிதியின் ஆலோசனை இந்திரா தகர்த்தார்

கோட்டயம், ஏப். 21—

பதட்டநிலை மிகுந்த எல்லைப்புறங்களில் மட்டும் அவசர நிலையை வைத்துக் கொள்வது என்ற தமிழக முதலமைச்சர் கருணாநிதியின் ஆலோசனையை பிரதமர் இந்திரா காந்தி நிராகரித்தார்.

டெல்லிக்குப் போகு முன்பு நிருபர்களிடம்பேசிய பிரதமர் மத்தியப் பிரதேச மாநிலம் மட்டும்தான் இந்திய நாட்டின் எல்லையைக் கொண்டிருக்கவில்லை யென்றும் மற்ற எல்லா மாநிலங்களும எல்லைப்புறத்தில்தான் உள்ளன என்றும் கூறினர்.

மேலும், இன்றைய உலக நிலைமையில் இந்தியாவின் கடல் புறமாகவும் சரி நிலவழியாகவும் சரி பதட்ட நிலைகள் நீடிக்கின்றனவாம். அதனல் அவசர நிலைமை இந்தியாவில் நீடிப்பதற்கு அவசியம் இருக்கிறதாம்.

---

### தமிழகத்துக்கு

## ஜே.பி. வருகை

சென்னை, ஏப். 22—

தமிழ்நாட்டில் மே. 5-ந் தேதி முதல் 6 நாட்கள் ஜெயப்பிரகாஷ்நாராயணன் சுற்றுப்பயணம் மேற்கொள்கிருர்.

---

[3-ம் பத்தி தொடர்ச்சி]

அதிகாரி ஒருவர் பெங்களூரில் கூறினர்.

### இரண்டாவது கோள்

'முதல் அரியப்பட்டா' வெற்றிகரமாக விண்வெளியில் சுழன்று வருவதால், 'அரியபட்டா-2'ஏவுவதற்கும் இந்திய விஞ்ஞானிகள் ஆலோசித்து வருகிருர்கள்.

இதற்கான வசதிகளைப் பெற சோவியத் யூனியனுடன் இந்திய விண்வெளி இலாகா விரைவில் பேச்சுவார்த்தைநடத்தவிருக்கிறது.

முதலில் ஆர்யபட்டா செயற்கைக் கோள்கள் இரண்டை இந்தியவிஞ்ஞானிகள் தயாரித்தனர். முதலாவது ஏவப்படும் கோள் சரிவரச் செயல்படாவிட்டால் இரண்டாவது தயாராக கையிருப்பில வைக்கப்பட்டிருந்தது. இப்போது அதை பூமியின் வள வசதிகளை அறியும் தொலைதிருஷ்டி உள்ள செயற்கைக் கோளாக பயன்படுத்த ஆலோசிக்கப்படுகிறது. அதில் டெலிவிசன் கேமிராக்களும் அமைக்கப்படுமாம்.

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு, மதுரை, 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.

---

## பழைய நெய்வேலி பஞ்சாயத்தில் ஊழல் நடப்பதாக புகார்

நெய்வேலி, ஏப் 22—

நெய்வேலிக்கு அருகில் உள்ள கெங்கை கொண்டானில் கடந்த 13-ம் தேதி நடந்த மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக் கூட்டத்தில், தி மு க வைச் சேர்ந்தவர் தலைவராக உள்ள பழைய நெய்வேலி பஞ்சாயத்து நிர்வாகத்தில் பல்வேறு முறைகேடுகளும் ஊழல்களும் நடப்பதாக புகார் கூறப்பட்டது.

மேலும் ஜனநாயக முறைப்படி நடப்பது இல்லையென்றும் இதே போக்கு நீடித்தால் மக்களைத் திரட்டி போராட்டம் நடத்த வேண்டி வரும் என்றும் எச்சரிக்கப்பட்டது.

தோழர் கே வேணு தலைமையில் நடந்த இக்கூட்டத்தில் என் ஆர் ராமசாமி, எஸ் வீரபத்திரன், எம் ரத்தினசபாபதி, கே ராமச்சந்திரன், என் கணபதி, என் ராஜு, நெய்வேலி மாதர் சங்கச் செயலாளர் ஆர் ஜான்சிராணி ஆகியோர் பேசினர்.

---

### காஞ்சியில்

## பேரமைப்பு ஊர்வலம்

காஞ்சிபுரம், ஏப். 20—

தமிழ்நாடு அரசு ஊழியர்—ஆசிரியர்— உள்ளாட்சித்துறை ஊழியர்களின் பேரமைப்பு சார்பில் திரு. எஸ், நாராயணன் தலைமையில் மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகம் முன்பிருந்து பெரிய ஊர்வலம் புறப்பட்டு தேரடியை அடைந்தது.

அங்கு டி. ஆர். இராசசேகரன் (ஆசிரியர் கூட்டணி) தலைமையில் கடந்த பொதுக்கூட்டத்தில் அ. சவுந்தரராஜன் (மார்க்சிஸ்ட) மதன்ராஜ (ஸ்தா. காங்) பாலாஜி (அதிமுக) அன்பரசு (இங் காங) முருகேசன் (வலது-கம்யூ) வாசுதேவன் (சோச) முனுசாமி (உழைப்பாளர் கட்சி) பி. இராமு, நெ இலெ சீதரன் (என்.ஜி.ஓ) பேசினர்.

---

## அப்பனுக்குப் பிள்ளை தப்பாமல் பிறந்திருக்கு....

ஒரு தகப்பன் தீய வழிகளில் செல்பவனுயிருந்து— அவனது மகனும் அதே வழியில் இறங்கிவிடுவானேயானல், அவனை ஊரில இருப்பவர்கள் அனைவரும் "அப்பனுக்குப் பிள்ளை தப்பாமல் பொறந்திருக்கு" என்று கூறுவார்கள.

அதே கதைதான் தற்போது மேற்கு வங்கத்தில் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது.

மேற்கு வங்கத்தில், 1972 ல் துப்பாக்கி முனையில் வாக்காளர்களை வாககுச் சாவடியை அணுகக்கூட முடியாதபடி விரட்டியடித்துவிட்டு—எதிர்க் கடசிகளின் வாக்குச் சாவடி ஏஜெண்டுகளை விரட்டியடித்து விட்டு ஓட்டுக்களைப் பூராவும் தங்களது சின்னத்திலேயே குத்தி பெட்டியில் நிரப்பினர் இந்திரா காங்கிரசார்.

இவ்வாறு மோசடித்தேர்தல் நடத்தி ஆட்சியில் அமர்ந்திருக்கிருர் சித்தார்த்தசங்கர் ரே.

அத்தேர்தலிலும் அதற்குப் பின்பும் சித்தார்த்தனுக்கு பேருதவியாக இருந்து செயல்பட்டு வரும் காங்கிரஸ் மாணவர்களும் [சத்ர பரிசத்]—அதே வழியில் இறங்கி வருகிருர்கள்!—

'அப்பனுக்குப் பிள்ளை தப்பாமல் பிறக்காதா' என்ன?

இதோ ஒரு நிகழ்ச்சி.........

பங்குடா கிருஷ்தவக் கல்லூரி மாணவர் பேரவைத் தேர்தல். 14—3—75ந் தேதியன்று தேர்தல் என அறிவிக்கதிலிருந்து சத்ரபரிசத் குண்டர்கள், மாணவர்களை மிரட்டுவதிலும் பயமுறுத்துவதிலும் இறங்கி விட்டனர். காரணம், தாங்கள் தோற்று விடுவோம் என்ற கிலி. எஸ் எப் ஐ வெற்றி பெற்றுவிடும் என்ற பயம்.

(தேர்தல்தினத்தன்றுமாணவ-மாணவிகளையும், இந்திய மாணவர் சங்க (எஸ்எப்ஐ) வேட்பாளர்களையும் மிரட்ட— மோசடி மன்னன் சித்தார்த்த ரே 1972 சட்டமன்றத் தேர்தலில் பல்வேறு பிரிவு போலீசையும், இராணுவத்தையும் இறக்கி பயன்படுத்தியதுபோல் — வெளியிடங்களிலிருந்து ரவுடிகளை இறக்கினர். ஆனலும் முயற்சி பலிக்கவில்லை.

காலை வகுப்பு (மார்னிங் செஸ்ஸன்) தேர்தலில் சத்ர பரிசத் தோற்றுவிட்டது.

எனவே, பயமுறுத்தலோடு நிற்காமல் வேட்பாளர்களைக் கடத்திச் சென்று ஒளித்து வைக்கும் முயற்சியிலும் இறங்கினர்.

"தாய் எட்டடி பாய்ந்தால்
குட்டி பதினரடி பாய வேண்டாமா?"

இளமறிவியல் [பி எஸ் சி] முதலாண்டு வகுப்பு எஸ் எப் ஐ வேட்பாளர் கிங்கர்கானை கடத்திச் செல்ல முயன்றனர். அதில்தோற்றனர். எனவே,

இளங்கலை(பி ஏ) முதலாண்டு வகுப்பு எஸ் எப் ஐ வேட்பாளரான நந்ததுலால் ஹஜராவை விடுதியிலேயே ஓர் அறைக்குள் பூட்டி வைதது விட்டனர் தேர்தல் சமயத்தில் வகுப்புக்குச் செல்ல அவர் அனுமதிக்கப்படவில்லை.

ஆனலும் அவ்வகுப்பில் போட்டியிட்ட எஸ். எப். ஐ (மாற்று) வேட்பாளர் பெரும வெற்றி பெற்றுர்.

பயமுறுத்தல், பலாத்காரம், கடத்தல், மோசடி ஆகிய இழி செயல்களில் ஈடுபட்டதன் விளைவாக சத்ர பரிசத்—40 இடங்களில் 8-ல் போட்டியின்றியே வெற்றி பெற்று விட்டனர்.

மீதியுள்ள 32 இடங்களில் நடந்த தேர்தல்களில் முழுமையாக பங்கு கொள்ள முடியாதவாறு எஸ் எப் ஐ ஆதரவு மாணவ—மாணவியர் பலாத்காரமாகத் தடுக்கப்பட்டனர்.

மொத்த மாணவர்களில் 50 சதவீதம் பேர்தான் வாக்குப்பதிவில் கலந்து கொண்டனர்.

இத்தகைய சூழ்நிலையிலும், 32 இடங்களில் போட்டியிட்டு 18 இடங்களைக் கைப்பற்றியது எஸ் எப் ஐ. சத்ரபரிசத் 14ல் வெற்றி பெற்றுவிட்டது. எஸ் எப் ஐ மொத்த வாக்குகளில சத்ரபரிசத்தை விட 100 வாக்குகள் அதிகம பெற்றது.

எஸ்எப்ஐயின் வெற்றியையும், சத்ரபரிசத் மீது மாணவர்கள் கொண்டுள்ள வெறுப்பையும் கண்டு ஆத்திரமுற்ற சத்திரபரிசத் குண்டர்கள் தங்களது 'சொந்த' — 'கைவந்த' 'கலை'யை மேற்கொள்ள ஆரம்பித்தனர்.

தேர்தல் முடிவு அறிவிக்கப்பட்டவுடனேயே, கல்லூரியின் எல்லா வாயில்களின் கதவுகளும் சாத்தப்பட்டன. வெளியிலிருந்து கொண்டு வரப்பட்ட குண்டர்கள் குவிக்கப்பட்டனர். எஸ்எப்ஐ தோழர்கள் இரும்புத்தடி, செயின், தடி முதலியவற்றால் தாக்கப்பட்டனர்.

ஸ்தல எஸ்எப்ஐ தலைவர் கிங்கர் கான, கௌதம் சவுத்ரி, பிரான்சய்ராய் முதலியோர் பலத்தகாயத்துடன் மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வருகின்றனர்.

இந்தத் தாக்குதலைக் கண்டித்து பங்குடா நகரில் ஊர்வலமும் ஆர்ப்பாட்டங்களும நடந்தன.

கடந்த இரண்டு ஆண்டுகளாக நடந்த தேர்தல்களிலும் எஸ்எப்ஐயே தொடர்ந்து வாகைசூடி வந்ததால், இந்த ஆண்டு மாணவர் பேரவை நிர்வாகிகளுக்கான தேர்தலை நடத்தாமல் இருக்க, கல்லூரி நிர்வாகிகளும் சத்ரபரிசத்தும் கூட்டுச் சதியில் இறங்கினர்.

ஆனல் மாணவர்களின் நிர்ப்பந்தத்தின் காரணமாக — வழக்கத்துக்கு மாருக நேரிடைத் தேர்தல் மூலம் தேர்ந்தெடுப்பது என்று நிர்வாகிகள் முடிவு செய்தனர். இதனையும் மாணவர்கள் எதிர்த்தனர். ஆனலும் நிர்வாகம்—எதேச்சாதிகாரமாக நேரிடைத் தேர்தலமூலமதான் தேர்ந்தெடுப்பது என்ற தங்களது முடிவை நிலைநாட்டினர். இதன் மூலம் எப்படியாவது எஸ் எப் ஐயை தோற்கடித்துவிட வேண்டும் என்பது திட்டம். அத்திட்டம் வெற்றி பெற்றது. ஆனல் எஸ் எப் ஐ 40ல் 18 இடங்களைக் கைப்பற்றியது குறிப்பிடத்தக்க வெற்றியாகும்.

---

## வந்து நிற்போம் போலீசில்....

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

மதுரை நகர் 2-வது வார்டு ஆண்டாள் புரத்தில் நீண்ட நாட்களாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கடசியில் தொண்டாற்றி வரும் தோழர் பட்டுக்கோட்டை தங்கமலையின் தாயார் திருமதி காளியம்மாள் தனது 80 வயதில்—கடந்த 2 4-75ல் காலமானர்.

அன்று தோழர்கள் எம் முனியாண்டி, கே அங்கமுத்து, கே அய்யாவு, எம் குமாரசாமி, மற்றும் ஏராளமான தோழர்கள் இல்லத்துக்குச் சென்று அனுதாபம் தெரிவித்தனர்.

கிறீர்கள். இந்தமாதிரியான பிரச்சாரத்தை நிறுத்தாவிட்டால் உங்கள் இருவரையும் கேட்டில் விட்டு அடிக்க விடுவேன் என்று மிரட்டினாராம்.

எனவே, தங்களுடைய உயிருக்கு எந்த நேரமும் ஆபத்து ஏற்படலாம் என்று அஞ்சுவதாகவும் எனவே, இதில் தலையிட்டு விசாரித்து அந்த ஆபத்தைத் தவிர்க்கும் படியும் தனது புகார் மனுவில் க சிதம்பரம் கோரியுள்ளார்.